यावन्न गृह्णन्ति शिरांसि बाणा रामेरिता राक्षसपुङ्गवानाम् ।
वज्रोपमा वायुसमानवेगाः प्रदीयतां दाशरथाय मैथिली ॥ ४ ॥

| | | | |
|---|---|---|---|
| वज्रोपमाः | "வஜ்ராயுதத்தை நிகர்த்தவைகளும் | राक्षसपुङ्गवानां | ராக்ஷஸோத்தமர்களுடைய |
| वायुसमानवेगाः | காற்றைப்போல் கடுந்து செல்பவைகளுமான | शिरांसि | சிரங்களை |
| | | गृह्णन्ति न यावत् | வாங்கும் முன்னரே |
| | | मैथिली | மைதிலியார் |
| बाणाः | பாணங்கள் | दाशरथाय | ஸ்ரீராமருக்கு |
| रामेरिताः | ஸ்ரீராமரால் பிரயோகிக்கப்பட்டவைகளாய் | प्रदीयताम् | திருப்பிச்சமர்ப்பித்து விடப்படட்டும். |

न कुम्भकर्णेन्द्रजितौ न राजा तथा महापार्श्वमहोदरौ वा ।
निकुम्भकुम्भौ च तथाऽतिकायः स्थातुं न शक्ता युधि राघवस्य ॥ ५ ॥

| | | | |
|---|---|---|---|
| राघवस्य | "ஸ்ரீராமருடைய | न | அப்படியே வல்லவரல்லர். |
| युधि | போரில் | | |
| स्थातुं | எதிர்த்துநிற்க | महापार्श्वमहोदरौ | மகாபார்சுவனும் மஹோதரனும் |
| निकुम्भकुम्भौ च | நிகும்பனும் கும்பனும் | | |
| अतिकायः तथा | அதிகாயனும் | | |
| शक्ताः न | வல்லவரல்லர். | न | வல்லவரல்லர். |
| कुम्भकर्णेन्द्रजितौ | கும்பகர்ணனும் இந்திரஜித்தும | राजा वा | மன்னரேயாயினும் |
| | | तथा | அங்ஙனம்தான். |

जीवंस्तु रामस्य न मोक्ष्यसे त्वं गुप्तः सवित्राऽप्यथ वा मरुद्भिः ।
न वासवस्याङ्कगतो न मृत्योर्नभो न पातालमनुप्रविष्टः ॥ ६ ॥

| | | | |
|---|---|---|---|
| त्वं | "தேவரீர், | मृत्योः | யமனுடையவோ |
| सवित्रा | சூர்யபகவானாலோ | अङ्कगतः | மடி மீதமர்ந்தவராயினும் |
| अथवा | அல்லது | | |
| मरुद्भिः | தேவதைகளாலோ | न | உயிருடன் திரும்பமாட்டீர். |
| गुप्तः अपि | பாதுகாக்கப்பட்டவராயினும் | | |
| रामस्य तु | ஸ்ரீராமரிடமிருந்து மட்டும் | नभः | ஆகாயத்திலும் |
| | | न | தப்பீர். |
| जीवन् | உயிருடையவராய் | पातालं | பாதாளத்தில் |
| मोक्ष्यसे न | திரும்பமாட்டீர். | अनुप्रविष्टः | புகுந்திடினும் |
| वासवस्य | இந்திரனுடையவோ | न | தப்பீர். |

भित्त्वा न तावत्प्रविशन्ति कायं प्राणान्तिकास्तेऽशनितुल्यवेगाः ।
शिताः शरा राघवविप्रमुक्ताः प्रहस्त तेनैव विकत्थसे त्वम् ॥ ७ ॥

| | | | |
|---|---|---|---|
| प्रहस्त | "பிரஹஸ்த! | ते | உனது |
| अशनितुल्यवेगाः | இடியை நிகர்த்த ஆற்றலுள்ளவைகளும் | कायं | உடலை |
| प्राणान्तिकाः | உயிரை மாய்த்தே தீருபவைகளும் | भित्त्वा | பிளந்துகொண்டு |
| शिताः | கூரியவையுமான | तावत् | இன்னும் |
| शराः | பாணங்கள் | प्रविशन्ति न | உட்புகவில்லை. |
| राघवविप्रमुक्ताः | ஸ்ரீராமரால் போடப்பட்டவைகளாய் | तेन एव | அதனால்தான் |
| | | त्वं | தேவரீர் |
| | | विकत्थसे | பெருமையடித்துக்கொள்ளுகிறீர்." |

निशम्य वाक्यं तु विभीषणस्य ततः प्रहस्तो वचनं बभाषे ।
न नो भयं विद्म न दैवतेभ्यो न दानवेभ्यो ह्यथ वा कुतश्चित् ॥ ८ ॥

| | | | |
|---|---|---|---|
| ततः | அப்பொழுது | नः | "எமக்கு |
| प्रहस्तः | பிரஹஸ்தன் | दैवतेभ्यः अथ | தேவர்களிடமிருந்தும் |
| विभीषणस्य | விபீஷணனது | भयं | ஆபத்தை |
| तु | இவ்விஷயத்தில் | विद्म न | நாமறியோம். |
| वाक्यं निशम्य | உபதேசத்தைக் கேட்டு, | दानवेभ्यः वा | அசுரர்களிடமிருந் |
| वचनं | ஒரு சொல்லை | न | அறியோம். [தும்கூட |
| बभाषे | மொழிந்தார்: | कुतश्चित् हि | எங்கிருந்தாவது |
| | | न | அறிந்திலோம். |

न यक्षगन्धर्वमहोरगेभ्यो भयं न संख्ये पतगोत्तमेभ्यः ।
कथं नु रामाद्भविता भयं नो नरेन्द्रपुत्रात्समरे कदाचित् ॥ ९ ॥

| | | | |
|---|---|---|---|
| संख्ये | "போரில | नरेन्द्रपुत्रात् | மானிடமன்னனின் புதல்வனான |
| यक्षगन्धर्व-महोरगेभ्यः | யக்ஷர், கந்தர்வர், மஹோரகரிடமிருந்தும் | रामात् | ராமனிடமிருந்து |
| भयं | ஆபத்து | नः | நமக்கு |
| न | கிடையாது. | भयं | ஆபத்து |
| पतगोत्तमेभ्यः न | பறப்பனவையினின்றும் | कदाचित् नु | எப்பொழுதேனும் |
| समरे | போரில [கிடையாது. | कथं भविता | எப்படி ஏற்படும்?" |

प्रहस्तवाक्यं त्वहितं निशम्य विभीषणो राजहितानुकाङ्क्षी ।
ततो महात्मा वचनं बभाषे धर्मार्थकामेषु निविष्टबुद्धिः ॥ १० ॥

| | | | |
|---|---|---|---|
| ततः | அப்பொழுது | राजहितानुकाङ्क्षी | அரசருக்கு நன்மையை நாடியவராய் |
| धर्मार्थकामेषु | தர்மம், அர்த்தம், காமம் இவைகளில் | अहितं | தீங்குவிளைவிக்கும |
| निविष्टबुद्धिः | தேர்ச்சிபெற்ற மனத்தினராகிய | प्रहस्तवाक्यं | பிரஹஸ்தனது சொ[ல்லை |
| महात्मा | மகாத்மாவான | निशम्य तु | கேட்டபின்னர் |
| विभीषणः | விபீஷணர் | वचनं | ஒரு சொல்லை |
| | | बभाषे | பின்வருமாறு மொழிந்தார்: |

प्रहस्त राजा च महोदरश्च त्वं कुम्भकर्णश्च यथार्थजातम् ।
ब्रवीथ रामं प्रति तन्न शक्यं यथा गतिः स्वर्गमधर्मबुद्धेः ॥ ११ ॥

| | | | |
|---|---|---|---|
| प्रहस्त | "பிரஹஸ்த! | ब्रवीथ यथा | எவ்வண்ணமுரைக் |
| राजा च | மன்னரும் | तत् | அது [கிறீர்களோ |
| महोदरः | மஹோதரனும் | अधर्मबुद्धेः | மனத்தூய்மையற்றவ |
| कुम्भकर्णः च | கும்பகர்ணனும் | स्वर्गं | ஸ்வர்க்கத்தை [னுக்கு |
| त्वं च | நீயும் | गतिः | அடைதல் |
| रामं प्रति | ஸ்ரீராமரைப்பற்றி | यथा | எங்ஙனமோ அங்ஙன |
| अर्थजातं | மந்திராலோசனையை | शक्यं न | சாத்யமன்று. [மே |

वधस्तु रामस्य मया त्वया वा प्रहस्त सर्वैरपि राक्षसैर्वा ।
कथं भवेदर्थविशारदस्य महार्णवं तर्तुमिवाप्लवस्य ॥ १२ ॥

| | | | |
|---|---|---|---|
| प्रहस्त | "பிரஹஸ்த! | सर्वैः अपि वा | எல்லோராலுமென்றாலும் |
| अर्थविशारदस्य | இதுவரையில் செய்த காரியங்களில் பிரசித்திபெற்றவராகிய | अप्लवस्य | ஓடமில்லாதவனுக்கு |
| | | महार्णवं | சமுத்திரத்தை |
| रामस्य | ஸ்ரீராமருக்கு | तर्तुं | தாண்ட |
| वधः तु | வதையென்பது | इव | எப்படியோ அப்படியே |
| मया | என்னால்தானாகட்டும் | | |
| त्वया वा | உன்னால்தானாகட்டும் | कथं भवेत् | ஒருபொழுதும் முடியாது. |
| राक्षसैः | அரக்கர்கள் | | |

धर्मप्रधानस्य महारथस्य इक्ष्वाकुवंशप्रभवस्य राज्ञः ।
प्रहस्त देवाश्च तथाविधस्य कृत्येषु शक्तस्य भवन्ति मूढाः ॥ १३ ॥

| | | | |
|---|---|---|---|
| प्रहस्त | "பிரஹஸ்த! | इक्ष्वाकुवंशप्रभवस्य | இக்ஷ்வாகுவம்சத்தில் அவதரித்தவரும் |
| धर्मप्रधानस्य | புருஷார்த்தங்களில் தர்மமொன்றையே சர்வமுமாய்க் கொண்டவரும் | शक्तस्य | சர்வசக்தனுமாகிய |
| | | राज्ञः | மன்னரது |
| | | कृत्येषु | காரியவிஷயங்களில் |
| महारथस्य | மஹாரதரென்னும் பட்டம் பெற்றவரும் | देवाः च | தேவர்களும் |
| | | मूढाः | உள்ளபடி அறிய முடியாதவர்களாய் |
| तथाविधस्य | அப்பேர்ப்பட்ட வ்யாஜமுடையவராய் | भवन्ति | இருக்கின்றார்கள். |

तीक्ष्णा नता यत्तव कङ्कपत्रा दुरासदा राघवविप्रमुक्ताः ।
भित्त्वा शरीरं प्रविशन्ति बाणाः प्रहस्त ते नैव विकत्थसे त्वम् ॥ १४ ॥

| | | | |
|---|---|---|---|
| प्रहस्त | "பிரஹஸ்த! | कङ्कपत्राः | கழுகுச்சிறகு கட்டப்பட்டவைகளும் |
| तीक्ष्णाः | கூரானவைகளும் | | |
| नताः | கொஞ்சம் நுனி வளைந்திருக்கின்றவைகளும் | दुरासदाः | மாறுசெய்ய முடியாதவைகளுமான |

| | | | |
|---|---|---|---|
| ते | அந்த | भित्वा | பிளந்துகொண்டு |
| बाणाः | பாணங்கள் | प्रविशन्ति न | உட்புகவில்லை. |
| राघवविप्रमुक्ताः | ஸ்ரீராகவரால் போடப்பட்டவைகளாய் | यत् एव | இக்காரணத்தால் |
| तव | உனது | त्वं | நீ [தான் |
| शरीरं | உடலை | विकत्थसे | பெருமையடித்துக் கொள்ளுகிறாய். |

न रावणो नातिबलस्त्रिशीर्षो न कुम्भकर्णोऽस्य सुतो निकुम्भः ।
न चेन्द्रजिद्दाशरथिं प्रसोढुं त्वं वा रणे शक्रसमं समर्थाः ॥ १५ ॥

| | | | |
|---|---|---|---|
| शक्रसमं | "இந்திரனுக்குச சமானராகிய | त्रिशीर्षः न | திரிசிர்ஷனுமாகான். |
| दाशरथिं | ஸ்ரீராமரை | कुम्भकर्णः | கும்பகர்ணனும் |
| रणे | போரில் | अस्य | இவனது |
| प्रसोढुं | மேற்கொள்ள | सुतः | புதல்வனாகிய |
| समर्थाः | சமர்த்தர்களாய் | निकुम्भः | நிகும்பனும் |
| रावणः न | ராவணனுமாகான் ; | इन्द्रजित् च | இந்திரஜித்தும் |
| अतिबलः | அதிகபலம் பொருந்திய | न | ஆகார்கள். |
| | | त्वं वा | நீயும |
| | | न | ஆகாய். |

देवान्तको वाऽपि नरान्तको वा तथाऽतिकायोऽतिरथो महात्मा ।
अकम्पनश्चाद्रिसमानसारः स्थातुं न शक्ता युधि राघवस्य ॥ १६ ॥

| | | | |
|---|---|---|---|
| देवान्तकः अपि वा | "தேவாந்தகன் தானுகட்டும் | अतिरथः | அதிரதன்தானுகட்டும் |
| नरान्तकः वा | நராந்தகன் தானுகட்டும் | अद्रिसमानसारः | மலையை நிகர்த்த உறுதியுடைய |
| तथा | அப்படியே | अकम्पनः च | அகம்பனன் தானுகட்டும் |
| अतिकायः | அதிகாயன் தானுகட்டும் | युधि | போரில் |
| महात्मा | மகத்தான ஆற்றலுடைய | राघवस्य | ஸ்ரீராகவருக்கு |
| | | स्थातुं | எதிர்த்துநிற்க |
| | | न शक्ताः | சக்தர்கள் ஆகார்கள். |

अयं हि राजा व्यसनाभिभूतो मित्रैरमित्रप्रतिमैर्भवद्भिः ।
अन्वास्यते राक्षसनाशनार्थे तीक्ष्णः प्रकृत्या ह्यसमीक्ष्यकारी ॥ १७ ॥

| | | | |
|---|---|---|---|
| अयं राजा हि | "இந்த மன்னரோ | अमित्रप्रतिमैः | சத்துருக்களை ஒத்த [ன்ற |
| प्रकृत्या तीक्ष्णः | பிறவியில் கொடியவர் ; | मित्रैः | மித்திரர்களாகிய |
| असमीक्ष्यकारी | முன்யோசியாது தடுக்காய்செய்கிறவர் ; | भवद्भिः | உங்களால் |
| व्यसनाभिभूतः हि | செய்யத்தகாத காரியங்களைச்செய்கிறவரோ* | राक्षसनाशनार्थे | அரக்கர்களின் அழிவிற்காக |
| | | अन्वास्यते | அனுசரிக்கப்படுகிறார். |

*[வைதல், குற்றத்திற்குமீறிய தண்டனை விதித்தல், பொருளை நாசஞ்செய்தல், குடி, பரஸ்த்ரீகமனம், காலமில்லாத காலத்தில் வேட்டையாடுதல், சூது இவைகள் கொண்டவர்.]

अनन्तभोगेन सहस्रमूर्ध्ना नागेन भीमेन महाबलेन ।
बलात्परिक्षिप्तमिमं भवन्तो राजानमुत्क्षिप्य विमोचयन्तु ॥ १८ ॥

| | | | |
|---|---|---|---|
| अनन्तभोगेन | "பெரும் உடல் படைக்கப்பெற்றதும் | परिक्षिप्तं | சுற்றிக்கொள்ளப்பட்டிருக்கும் |
| सहस्रमूर्ध्ना | ஆயிரம் தலைகளையுடையதும் | इमं | இந்த |
| भीमेन | கொடியதும் | राजानं | மன்னனை |
| महाबलेन | கடும்விஷமுடையது | भवन्तः | நீங்கள் |
| नागेन | பாம்பால [மான | बलात् उत्क्षिप्य | பலாத்கரித்து தூக்கி |
| | | विमोचयन्तु | விடுவிக்கக்கடவீர்கள். |

यावद्धि केशग्रहणात्सुहृद्भिः समेत्य सर्वैः परिपूर्णकामैः ।
निगृह्य राजा परिरक्षितव्यो भूतैर्यथा भीमबलैर्गृहीतः ॥ १९ ॥

| | | | |
|---|---|---|---|
| परिपूर्णकामैः | வேண்டிய அனைவெலாம் வேண்டியபடி பெற்ற | केशग्रहणात् यावत् | குடுமியில் பிடித்திழுப்பதாலுமென்றாலும் |
| सुहृद्भिः | நண்பர்களாகிய | यथा | எப்படியோ அப்படியே |
| सर्वैः | எல்லோராலும் | समेत्य | ஒன்றுசேர்ந்து |
| भीमबलैः | கொடிய வலிமை [கொண்ட | राजा | மன்னர் |
| भूतैः | பேய்களால் | निगृह्य हि | பலாக்கரித்தும் |
| गृहीतः | பிடிக்கப்பட்டவனொருவன் | परिरक्षितव्यः | ரக்ஷிக்கப்படவேண்டியவர். |

सुवारिणा राघवसागरेण प्रच्छाद्यमानस्तरसा भवद्भिः ।
युक्तस्त्वयं तारयितुं समेत्य काकुत्स्थपातालमुखे पतन्सः ॥ २० ॥

| | | | |
|---|---|---|---|
| सुवारिणा | "அளவுகடந்த ஜலமுடைய | सः | அந்த |
| राघवसागरेण | ராமராகிய சமுத்திரத்தினால் | अयं | இவர் |
| प्रच्छाद्यमानः | மறைக்கப்பட்டு | भवद्भिः तु | உங்களாலேயே |
| काकुत्स्थपातालमुखे | ராமராகிற வடவாக்கினியில் | समेत्य | ஒன்றுசேர்ந்து |
| पतन् | விழுந்துக்கொண்டிருக்கும் | तरसा | பலாத்காரமாய் |
| | | तारयितुं | ஆபத்தினின்று தப்புவிக்க |
| | | युक्तः | ஏற்றவர். |

इदं पुरस्यास्य सराक्षसस्य राज्ञश्च पथ्यं ससुहृज्जनस्य ।
सम्यग्घि वाक्यं स्वमतं ब्रवीमि नरेन्द्रपुत्राय ददातु मैथिलीम् ॥ २१ ॥

| | | | |
|---|---|---|---|
| सराक्षसस्य | "அரக்கர்களோடு [கூடிய | नरेन्द्रपुत्राय | சக்கிரவர்த்திகுமாரருக்கு |
| अस्य | அந்த | ददातु | அவர் திருப்பிக்கொடுத்துவிடட்டும்என்கிற |
| पुरस्य | நகரத்திற்கும் | इदं वाक्यं | இந்த நியாயவிதி |
| ससुहृज्जनस्य | நண்பர்களோடுகூடிய | स्वमतं | என் மனத்திற்கிசைந்தனை |
| राज्ञः च | மன்னருக்கும் | सम्यक् हि | ஒளியாமலே [ததெனை |
| पथ्यं | நன்மை பயக்கிறதாகிற | ब्रवीमि | சொல்லுகிறேன். |
| मैथिलीं | மைதிலியாரை | | |

परस्य वीर्यं स्वबलं च बुद्ध्वा स्थानं क्षयं चैव तथैव वृद्धिम् ।
तथा स्वपक्षेऽप्यनुमृश्य बुद्ध्या वदेत्क्षमं स्वामिहितं च मन्त्री ॥ २२ ॥

| | | | |
|---|---|---|---|
| मन्त्री | "ஓர் மந்திரியென்ப | तथा | அவ்வண்ணமே |
| परस्य | சத்ருவினுடைய [வன் | स्वपक्षे अपि | தன்னிடத்திலும் |
| वीर्यं | சக்தியையும் | बुद्ध्या | நுண்ணறிவுகொண்டு |
| स्वबलं च | தனது சக்தியையும் | अनुमृश्य | ஆராய்ந்தறிந்து, |
| बुद्ध्वा | ஆராய்ந்தறிந்து, | स्वामिहितं | எஜமானனுக்கு நன்மை பயக்கத்தக்கதையும் |
| तथा एव | அப்படியே | | |
| स्थानं | உத்தேசத்தையும் | | |
| क्षयं | பாக்யக்குறைவையும் | क्षमं च एव | யுக்தமானதையுமே |
| वृद्धिं च | தெய்வபலத்தையும் | वदेत् | சொல்லவேண்டும்." |

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये युद्धकाण्डे चतुर्दशः सर्गः ॥

आदितः श्लोकाः 15144 युद्धकाण्डे आदितः श्लोकाः 469

पञ्चदशः सर्गः—பதினைந்தாவது ஸர்க்கம். ॥ १५ ॥

इन्द्रजिद्विभीषणविवादः—இந்திரஜித்திற்கும் விபீஷணனுக்கும் நடந்த விவாதம்.

बृहस्पतेस्तुल्यमतेर्वचस्तन्निशम्य यत्नेन विभीषणस्य ।
ततो महात्मा वचनं बभाषे तत्रेन्द्रजिन्नैर्ऋतयोधमुख्यः ॥ १ ॥

| | | | |
|---|---|---|---|
| नैर्ऋतयोधमुख्यः | ராக்ஷஸப்போர்வீரர்களில் முக்யனான | विभीषणस्य | விபீஷணனது |
| | | तत् | அந்த |
| महात्मा | அளவில்லா ஆற்றலுடைய | वचः | சொல்லை |
| | | यत्नेन | நெஞ்சம் பதைக்க |
| इन्द्रजित् | இந்திரஜித்து | निशम्य | கேட்டு |
| तत्र | அப்பொழுது | ततः | அதன்மேல் |
| बृहस्पतेः | பிருகஸ்பதிக்கு | वचनं | ஒரு மொழியை |
| तुल्यमतेः | ஒப்பான புத்தியையுடைய | बभाषे | பின்வருமாறு மொழிந்தான்: |

किं नाम ते तात कनिष्ठवाक्यमनर्थकं चैव सुभीतवच्च ।
अस्मिन्कुले योऽपि भवेन्न जातः सोऽपीदृशं नैव वदेन्न कुर्यात् ॥ २ ॥

| | | | |
|---|---|---|---|
| तात | "அப்பா! | यः | எவனேனுமொருவன் |
| कनिष्ठवाक्यं | உமது கடைசித்தம்பியின் உபதேசமானது | जातः न | பிறவாதவனாக |
| | | भवेत् अपि | இருப்பினும் |
| अनर्थकं च | நன்மை பயக்காததாய் | सः अपि | அவனும் |
| सुभीतवच्च | பயங்கொள்ளித்தனத்தைக் காட்டுகின்றதா | ईदृशं | இப்படிப்பட்டதை |
| ते एव | தேவரீருக்கே [யும் | वदेत् न एव | சொல்லவும் மாட்டான்; |
| किं नाम | எவ்வளவு இழிவை | | |
| अस्मिन् | இந்த [விளைவிக்கும்! | न कुर्यात् | அனுஷ்டிக்கவும் மாட்டான். |
| कुले | குலத்தில் | | |

सत्त्वेन वीर्येण पराक्रमेण शौर्येण धैर्येण च तेजसा च ।
एकः कुलेऽस्मिन्पुरुषो विमुक्तो विभीषणस्तात कनिष्ठ एषः ॥ ३ ॥

| | |
|---|---|
| तात | "அப்பா! |
| अस्मिन् | இந்த |
| कुले | குலத்தில் |
| सत्त्वेन | பிறவிக்குணத்தாலும் |
| वीर्येण | பெருமையாலும் |
| पराक्रमेण | ஆண்மையாலும் |
| शौर्येण | ஆற்றலாலும் |
| धैर्येण | ஆபத்தில் மனதைச் சிதறவிடாதிருக்கும் தன்மையாலும் |
| तेजसा च | அவமானத்தை பொறுக்காது மேல்விழுந்து தாக்கும் தன்மையாலும் |
| विमुक्तः | அறுகாமலிருக்கின்ற |
| पुरुषः | புருஷர் |
| एषः | இந்த |
| कनिष्ठः | கடைசித்தம்பியாகிய |
| विभीषणः | விபீஷணர் |
| एकः च | ஒருவர்தான். |

किं नाम तौ राक्षस राजपुत्रावस्माकमेकेन हि राक्षसेन ।
सुप्राकृतेनापि मतौ निहन्तुं शक्यौ कुतो भीषयसे स्म भीरो ॥ ४ ॥

| | |
|---|---|
| भीरो | "பயங்காளியாகிய |
| राक्षस | விபீஷணரே! |
| मतौ | உம்மால் புகழ்ந்து கூறப்பட்ட |
| तौ | அவ்விரு |
| राजपुत्रौ | ராஜபுத்திரர்கள் |
| किं नाम | எம்மாத்திரம்? |
| अस्माकं | எங்களில் |
| सुप्राकृतेन | மகா அல்பனாகிய |
| राक्षसेन एकेन अपि | அரக்கனொருவனாலேயே |
| निहन्तुं | கொல்வதற்கு |
| शक्यौ | சாத்தியமானவர்கள். |
| हि | ஆனபடியால் |
| कुतः | எக்காரணத்தைக் கொண்டு |
| भीषयसे स्म | பயமுறுத்திவிட்டீர்? |

त्रिलोकनाथो ननु देवराजः शक्रो मया भूमितले निविष्टः ।
भयार्दिताश्चापि दिशः प्रपन्नाः सर्वे तथा देवगणाः समग्राः ॥ ५ ॥

| | |
|---|---|
| मया | "என்னால் |
| त्रिलोकनाथः | திரிலோகநாதனும் |
| देवराजः | தேவராஜனுமாகிய |
| शक्रः | இந்திரன் |
| भूमितले | மானிடஉலகில் |
| निविष्टः | அடக்கிக்கொண்டுவந்து சேர்க்கப்பட்டான். |
| तथा | அப்படியே |
| देवगणाः | தேவகணங்கள் |
| सर्वे | எல்லோரும் |
| समग्राः | ஒன்றுகூடி |
| भयार्दिताः | பயத்தால் நடுக்கமுற்றவர்களாய் |
| दिशः च | எல்லா திக்குகளிலும் |
| प्रपन्नाः | ஓடத்தலைப்பட்டார்கள். |
| ननु अपि | இது இல்லையா என்ன சொல்லுமே. |

ऐरावतो विस्वरमुन्नदन्स निपातितो भूमितले मया तु ।
विकृष्य दन्तौ तु मया प्रसह्य वित्रासिता देवगणाः समग्राः ॥ ६ ॥

| | | | |
|---|---|---|---|
| सः | " அந்த | निपातितः | வீழ்த்தப்பட்டது. |
| ऐरावतः | ஐராவதம் | तथा | அப்படியே |
| दन्तौ | இருதந்தங்களிலும் | देवगणाः | தேவகணங்கள் |
| विकृष्य | பிடித்திழுத்து | समग्राः | எல்லாருமே |
| मया तु | என்னாலேயே | मया तु | என்னாலேயே |
| भूमितले | பூலோகத்தில் | प्रसह्य | மேற்கொள்ளப்பட்டு |
| विस्वरं | விகாரமாய் | वित्रासिताः | நடுங்கச்செய்யப்பட்டனர். |
| उन्नदन् | கூச்சலிடுவதாய் | | |

सोऽहं सुराणामपि दर्पहन्ता दैत्योत्तमानामपि शोकदाता ।
कथं नरेन्द्रात्मजयोर्न शक्तो मनुष्ययोः प्राकृतयोः सुवीर्यः ॥ ७ ॥

| | | | |
|---|---|---|---|
| सुराणां अपि | " தேவர்களுடையவும் | सः | அந்த |
| दर्पहन्ता | செருக்கையொழித்தவனும் | अहं | நான் |
| | | प्राकृतयोः | அற்பர்களான |
| दैत्योत्तमानां अपि | தைத்யோத்தமர்களுக்கும | मनुष्ययोः | மானிடரிருவர்களாகிய |
| शोकदाता | ஏக்கமுண்டாக்கியவனும் | नरेन्द्रात्मजयोः | மானிடமன்னனின் புதல்வர் விஷயத்தில் |
| | | कथं | எவ்வாறு |
| सुवीर्यः | வீர்யவானென பிரசித்திபெற்றவனுமான | शक्तः न | வல்லமை உடையவனாக மாட்டேன் ?" |

अथेन्द्रकल्पस्य दुरासदस्य महौजसस्तद्वचनं निशम्य ।
ततो महार्थं वचनं बभाषे विभीषणः शस्त्रभृतां वरिष्ठः ॥ ८ ॥

| | | | |
|---|---|---|---|
| शस्त्रभृतां | ஆயுதமேந்தியவர்களுக்குள் | तद्वचनं | அம்மொழியை |
| | | निशम्य | கேட்டு |
| वरिष्ठः | உத்தமரான | ततः | அப்பொழுது |
| विभीषणः | விபீஷணர் | अथ | பின்வரும் |
| महौजसः | அளவில்லா ஆற்றலுடையவனும் | महार्थं | குறையற்ற நன்மையையளிக்கவல்ல |
| दुरासदस्य | ஒருவராலும தகையமுடியாதவனும் | वचनं | ஹிதோபதேசத்தை |
| इन्द्रकल्पस्य | இந்திரனுக்குச்சமானமாகிய அவனுடைய | बभाषे | அருளிச்செய்தார் ; |

मूढः प्रगल्भोऽविनयोपपन्नस्तीक्ष्णस्वभावोऽल्पमतिर्दुरात्मा ।
मूर्खस्त्वमत्यन्तसुदुर्मतिश्च त्वमिन्द्रजिद्बालतया ब्रवीषि ॥ १२ ॥

| | | | |
|---|---|---|---|
| त्वं | "நீ | दुरात्मा | மகா துஷ்டன். |
| मूढः | தர்மவரம்பை அறியாதவன் | मूर्खः | விவேக சூன்யன். |
| प्रगल्भः | தன்னால் இயலாதது ஒன்றுண்டென அறியாதவன். | अत्यन्त- सुदुर्मतिः च | எப்பொழுதும் தீங்கிலேயே புத்தியைச் செலுத்துபவன். |
| अविनयोपपन्नः | பெரியோர்களுக்கடங்கா சிகாமணி. | इन्द्रजित् | இந்திரஜித்தே ! |
| | | त्वं | நீ |
| तीक्ष्णस्वभावः | கொடிய செயலுற்றவன். | बालतया | விஷயம் அறியாமையால் |
| अल्पमतिः | அற்பபுத்தியுடையவன். | ब्रवीषि | தெரிந்ததுபோல் பிதற்றுகிறாய். |

को ब्रह्मदण्डप्रतिमप्रकाशानर्चिष्मतः कालनिकाशरूपान् ।
सहेत बाणान् यमदण्डकल्पान्समक्षमुक्तान् युधि राघवेण ॥ १३ ॥

| | | | |
|---|---|---|---|
| ब्रह्मदण्डप्रतिम- प्रकाशान् | "பிரம்மதண்டத்திற்கொப்பான காந்தியுடையவைகளும், | बाणान् | பாணங்களை |
| | | युधि | போரில் |
| अर्चिष्मतः | ஜ்வாலைபெற்றவைகளும், | राघवेण | ஸ்ரீராமரால் |
| | | समक्षमुक्तान् | கட்புலனாய் விடுக்கப் பட்டவைகளாய் |
| कालनिकाशरूपान् | எமனை நிகர்த்த உருவமுடையவைகளும், | | |
| यमदण्डकल्पान् | யமதண்டத்தை நிகர்த்தவைகளுமான | कः | எவன் |
| | | सहेत | சகிப்பான் ? |

धनानि रत्नानि विभूषणानि वासांसि दिव्यानि मणींश्च चित्रान् ।
सीतां च रामाय निवेद्य देवीं वसेम राजन्निह वीतशोकाः ॥ १४ ॥

| | | | |
|---|---|---|---|
| राजन् | "மன்னவரே ! | दिव्यानि | சிறந்த |
| रामाय | ஸ்ரீராமருக்கு | विभूषणानि | ஆபரணங்களையும் |
| सीतां | சீதா | वासांसि च | ஆடைகளையும் |
| देवीं च | தேவியாரையும் | इह | இப்பொழுதே |
| रत्नानि | நம்மால் விசேஷமாய்க் கொண்டாடப்பட்ட | निवेद्य | சமர்ப்பித்துவிட்டு |
| | | वीतशोकाः | மனக்கவலையொழிந்தவர்களாய் |
| धनानि | தனங்களையும் | | |
| चित्रान् | உத்கிருஷ்டமான | वसेम | உயிருடன் வாழ்வோமாக." |
| मणीन् | ரத்னங்களையும் | | |

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये
युद्धकाण्डे पञ्चदशः सर्गः ॥

आदितः श्लोकाः 15158 युद्धकाण्डे आदितः श्लोकाः 483

**षोडशः सर्गः**—பதினாறாவது ஸர்க்கம். ॥ १६ ॥

**रावणेन विभीषणनिन्दनम्**—ராவணன் விபீஷணனை நிந்திப்பது.

**सुनिविष्टं हितं वाक्यमुक्तवन्तं विभीषणम् । अब्रवीत्परुषं वाक्यं रावणः कालचोदितः ॥**

| | | | |
|---|---|---|---|
| कालचोदितः | யமனால் அழைக்கப் பெற்ற | विभीषणं | விபீஷணனைப் பார்த்து |
| रावणः | ராவணன் | परुषं | கர்ணகடூரமாயிருக்கிற |
| हितं | நன்மை பயப்பதாகிய | वाक्यं | பதிலை |
| वाक्यं | ஆலோசனையை | अब्रवीत् | பின்வருமாறு மொழிந்தான் : |
| सुनिविष्टं उक्तवन्तं | நெஞ்சில் நன்கு பதியும்படியாய் சொல்லிய | | |

**वसेत्सह सपत्नेन क्रुद्धेनाशीविषेण वा । न तु मित्रप्रवादेन संवसेच्छत्रुसेविना ॥ २ ॥**

| | | | |
|---|---|---|---|
| सपत्नेन | "சத்ருவோடு என்றாலும் | मित्रप्रवादेन | மித்திரனாய் விளங்கிக் கொண்டு |
| क्रुद्धेन | சினங்கொண்ட | शत्रुसेविना तु | சத்ருவினிடத்தில் விச்வாஸம் உடையவனோடு மட்டும் |
| आशीविषेण वा | பாம்போடு என்றாலும் | संवसेत् न | வசிக்கவே கூடாது. |
| सह | கூடி | | |
| वसेत् | வசிக்கலாம். | | |

**जानामि शीलं ज्ञातीनां सर्वलोकेषु राक्षस । हृष्यन्ति व्यसनेष्वेते ज्ञातीनां ज्ञातयः सदा ॥**

| | | | |
|---|---|---|---|
| राक्षस | "அரக்கா! | एते ज्ञातयः | இந்த ஞாதிகள் |
| सर्वलोकेषु | எல்லா உலகங்களிலும் | ज्ञातीनां | (தமது) ஞாதிகளின் |
| ज्ञातीनां | ஞாதிகளினுடைய | व्यसनेषु | இக்கட்டுகளில் |
| शीलं | ஸ்பாவத்தை | सदा | எப்பொழுதும் |
| जानामि | நான் நன்றாக அறிவேன். | हृष्यन्ति | உள்ளம் பூரிக்கின்றார்கள். |

**प्रधानं साधनं वैद्यं धर्मशीलं च राक्षस । ज्ञातयो ह्यवमन्यन्ते शूरं परिभवन्ति च ॥ ४ ॥**

| | | | |
|---|---|---|---|
| राक्षस | "அரக்கா! | धर्मशीलं | வழுவாத அறநெறியுற்றவனும் |
| प्रधानं | குலத்தில் ஜ்யேஷ்டனும் | शूरं च | சூரனுமாகிய ஒருவனை |
| साधनं | காரியங்களை குறைவின்றி முடிக்கின்றவனும் | ज्ञातयः हि | ஞாதிகள் மாத்திரம் |
| वैद्यं | கற்றறிந்தவனும் | अवमन्यन्ते | அவமதிக்கின்றார்கள். |
| | | परिभवन्ति च | ஆபத்தையும் விளைவிக்கின்றார்கள். |

**नित्यमन्योन्यसंहृष्टा व्यसनेष्वाततायिनः । प्रच्छन्नहृदया घोरा ज्ञातयस्तु भयावहाः ॥५॥**

| | | | |
|---|---|---|---|
| ज्ञातयः | "ஞாதிகள் | प्रच्छन्नहृदयाः | கபடமனதுடையவர்களாய் |
| नित्यं | எக்காலத்திலும் | घोराः | கொடிய |
| अन्योन्यसंहृष्टाः | கூடிக்குலாவுபவர்களாய் | भयावहाः तु | துரோகம் பண்ணுபவர்களே. |
| व्यसनेषु | ஆபத்துகளில் | | |
| आततायिनः | ஒழிக்க தீட்டிய கத்தியுடன் இருக்கின்றவர்களாய் | | |

श्रूयन्ते हस्तिभिर्गीताः श्लोकाः पद्मवने क्वचित्। पाशहस्तान्नरान्दृष्ट्वा शृणु तान्गदतो मम॥

| | | | |
|---|---|---|---|
| क्वचित् | "ஒருகாலத்தில் | हस्तिभिः | யானைகளால் |
| पद्मवने | பத்மவனமென்ற | गीताः | பாடப்பட்டன என்று |
| नरान् | மனிதர்களை [காட்டில் | श्रूयन्ते | வழங்கப்படுகின்றன. |
| पाशहस्तान् दृष्ट्वा | கையுங்கயிறுமாக இருப்பவர்களாகப் பார்த்து | तान् | அவைகளை |
| | | गदतः | உரைக்கும் |
| | | मम | எனக்கு |
| श्लोकाः | பின்வரும் சுலோகங்கள் | शृणु | செவிகொடுத்துக் கேள். |

नाग्निर्नान्यानि शस्त्राणि न नः पाशा भयावहाः। घोराः स्वार्थप्रयुक्तास्तु ज्ञातयो नो भयावहाः॥

| | | | |
|---|---|---|---|
| नः | "'நமக்கு | ज्ञातयः तु | ஞாதிகள்தான் |
| पाशाः | பாசங்கள் | स्वार्थप्रयुक्ताः | தங்களது நன்மையில் மாத்திரம் ஈடுபட்டவர்களாய் |
| भयावहाः न | ஆபத்தை விளைவிப்பவைகள் அல்ல. | | |
| अग्निः | அக்னியும் | घोराः | கொடியவர்களாய் |
| न | இல்லை. | नः | நமக்கு |
| अन्यानि शस्त्राणि | வேறு ஆயுதங்களும் | भयावहाः | ஆபத்தை விளைவிக்கின்றார்கள். |
| न | இல்லை. | | |

उपायमेते वक्ष्यन्ति ग्रहणे नात्र संशयः। कृत्स्नाद्भयाज्ज्ञातिभयं सुकष्टं विदितं च नः॥

| | | | |
|---|---|---|---|
| एते | "'இவர்கள் | भयात् | ஆபத்தைவிட |
| ग्रहणे | பிடிக்கும் விஷயத்தில் | ज्ञातिभयं | ஞாதிகளால் விளையும் தீங்கு |
| उपायं | உபாயத்தை | | |
| वक्ष्यन्ति | சொல்லுவார்கள். | सुकष्टं | மிக அஸஹ்யமானது. |
| अत्र | இதில் | नः | நமக்கு |
| संशयः न | ஐயமில்லை. | विदितं च | இது தெரிந்த விஷயமே. |
| कृत्स्नात् | எல்லா | | |

विद्यते गोषु संपन्नं विद्यते ब्राह्मणे दमः। विद्यते स्त्रीषु चापल्यं विद्यते ज्ञातितो भयम्॥

| | | | |
|---|---|---|---|
| गोषु | "'பசுக்களிடத்தில் | स्त्रीषु | பெண்களிடத்தில் |
| सम्पन्नं | சர்வ பாக்யமும் | चापल्यं | காரியமில்லாததில் அவசரமென்பது |
| विद्यते | விளங்குகிறது. | | |
| ब्राह्मणे | பிராம்மணர்களிடத்தில் | विद्यते | விளங்குகிறது. |
| | | ज्ञातितः | ஞாதிகளிடமிருந்து |
| दमः | இந்திரியநிக்ரகம் | भयं | ஆபத்து |
| विद्यते | விளங்குகிறது. | विद्यते | ஏற்படுகிறது.' |

**सुनीतं हितकामेन वाक्यमुक्तं दशानन । न गृह्णन्त्यकृतात्मानः कालस्य वशमागताः ॥**

| | | | |
|---|---|---|---|
| दशानन | "தசமுகரே! | वाक्यं | ஆலோசனையை |
| हितकामेन | க்ஷேமமொன்றையே நாடியவனால் | कालस्य | யமனது |
| उक्तं | விண்ணப்பம் செய்யப்பட்ட | वशं | வலையில் |
| सुनीतं | முற்றிலும் தர்மத்தோடு இயந்ததாயிருக்கிற | आगताः | சிக்கிக்கொண்ட |
| | | अकृतात्मानः | மனஅடக்கமில்லாதவர்கள் |
| | | गृह्णन्ति न | ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். |

**सुलभाः पुरुषा राजन्सततं प्रियवादिनः । अप्रियस्य तु पथ्यस्य वक्ता श्रोता च दुर्लभः ॥**

| | | | |
|---|---|---|---|
| राजन् | "அரசே! | पथ्यस्य तु | நன்மை பயப்பதை மட்டும் |
| प्रियवादिनः | உள்ளங்குளிர உரைக்கும் | वक्ता | சொல்லுகிறவன் |
| पुरुषाः | மானிடர்கள் | दुर्लभः | கிடைப்பதரிது. |
| सततं | எப்பொழுதும் | श्रोता | சொல்லப்பட்டதை ஏற்றுக்கொள்ளுகிறவன் |
| सुलभाः | ஏராளமாய்க் கிடைப்பார்கள். | च | அப்படியே கிடைப்பதரிது. |
| अप्रियस्य | உள்ளத்திற்கினிமை விளைவிக்காததாயும் | | |

**बद्धं कालस्य पाशेन सर्वभूतापहारिणा । न नश्यन्तमुपेक्षेयं प्रदीप्तं शरणं यथा ॥ २२ ॥**

| | | | |
|---|---|---|---|
| कालस्य | "யமனது | प्रदीप्तं | தீப்பற்றியெரியும் |
| सर्वभूतापहारिणा | எல்லாப்பிராணிகளின் உயிரை மாய்க்கும் | शरणं | வீட்டை |
| पाशेन | பாசத்தினால் | यथा | கவனியாது எப்படியிருக்கமுடியாதோ அப்படியே |
| बद्धं | கட்டுண்டு | | |
| नश्यन्तं | அழிய இருக்கிற தேவரீரை | उपेक्षेयं न | என் கடமையைச் செய்யாது நானிரேன். |

**दीप्तपावकसङ्काशैः शितैः काञ्चनभूषणैः । न त्वामिच्छाम्यहं द्रष्टुं रामेण निहतं शरैः ॥**

| | | | |
|---|---|---|---|
| दीप्तपावकसङ्काशैः | "கொழுந்துவிட்டெரியும் தீபோல் பிரகாசிக்கிறவைகளும் | रामेण | ஸ்ரீராமரால் |
| शितैः | கூரானவைகளும் | त्वां | தேவரீரை |
| काञ्चनभूषणैः | பொன்னாலலங்கரிக்கப்பட்டவைகளுமான | निहतं | கொல்லப்பட்டவராய் |
| | | द्रष्टुं | (என் கடமையைச் செய்யாது) பார்க்க |
| शरैः | பாணங்களால் | अहं इच्छामि न | நான் துணியேன். |

**शूराश्च बलवन्तश्च कृतास्त्राश्च रणाजिरे । कालाभिपन्नाः सीदन्ति यथा वालुकसेतवः ॥**

| | | | |
|---|---|---|---|
| रणाजिरे | "போர்க்களத்தில் | कृतास्त्राः च | ஆயுதப்பயிற்சியில் நிபுணர்களுமான |
| वालुकसेतवः | மணலால் கட்டப்பட்ட அணைகள் | शूराः च | சூரர்களும் |
| | | कालाभिपन्नाः | யமனுக்கு ஆட்பட்டவர்களாய் |
| यथा | போலவே | | |
| बलवन्तः च | பலவான்களும் | सीदन्ति | நாசமடைகின்றனர். |

**तन्मर्षयतु यच्चोक्तं गुरुत्वाद्धितमिच्छता । आत्मानं सर्वथा रक्ष पुरीं चेमां सराक्षसाम् ॥**

| | | | |
|---|---|---|---|
| हितं इच्छता | "நன்மையை நாடிய | सर्वथा | எப்படியாவது |
| यत् | எது [என்னால் | सराक्षसां | ராக்ஷஸர்கள் உள்ளிட்ட |
| उक्तं | சொல்லப்பட்டதோ | | |
| तत् च | அதெல்லாவற்றையும் | इमां | இந்த |
| गुरुत्वात् | பெரியவராகையால் | पुरीं च | நகரையும் |
| मर्षयतु | தேவரீர் மன்னித்த ருளவேண்டும். | आत्मानं | தேவரீரையும் |
| | | रक्ष | (அழியாது) ரக்ஷியும். |

**स्वस्ति तेऽस्तु गमिष्यामि सुखी भव मया विना ॥ २६ ॥**

| | | | |
|---|---|---|---|
| गमिष्यामि | "நான் இதைவிட்டு போய்விடுகிறேன். | मया विना | என்னை விட்டுப் பிரிந்து |
| ते | தேவரீருக்கு | सुखी | குறைவற்ற வாழ்வுற்ற வராய் |
| स्वस्ति | க்ஷேமமே | | |
| अस्तु | இருக்கக்கடவது. | भव | ஆகுவீராக. |

**निवार्यमाणस्य मया हितैषिणा न रोचते ते वचनं निशाचर ।**
**परीतकाला हि गतायुषो नरा हितं न गृह्णन्ति सुहृद्भिरीरितम् ॥ २७ ॥**

| | | | |
|---|---|---|---|
| निशाचर | "நிசாசரரே! | गतायुषः | ஆயுள் முடிந்து |
| हितैषिणा | நன்மையைநாடிய | परीतकालाः | யமனால் கட்டுண்ட |
| मया | என்னால் | नराः हि | மானிடர்களோ |
| निवार्यमाणस्य | தடுக்கப்பட்டவராகிய | सुहृद्भिः | நண்பர்களால் |
| ते | தேவரீருக்கு | ईरितं | உரை செய்யப்பட்ட |
| वचनं | என்சொல் | हितं | ஹிதமான சொல்லை |
| न रोचते | பிடிக்கவில்லை | गृह्णन्ति न | ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்". |

**इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये युद्धकाण्डे षोडशः सर्गः ॥**

अदितः श्लोकाः 15185  युद्धकाण्डे आदितः श्लोकाः 510

## सप्तदशः सर्गः—பதினேழாவது ஸர்க்கம். ॥ १७ ॥

### विभीषणशरणागतिः—விபீஷண சரணாகதி.

**इत्युक्त्वा परुषं वाक्यं रावणं रावणानुजः । आजगाम मुहूर्तेन यत्र रामः सलक्ष्मणः ॥१॥**

| | | | |
|---|---|---|---|
| रावणानुजः | ராவணன் தம்பி விபீஷணர் | उक्त्वा | சொல்லிவிட்டு |
| | | मुहूर्तेन | ஒரு முகூர்த்தகாலத் [திற்குள் |
| इति | மேற்கண்டவாறு | रामः | ஸ்ரீராமர் |
| परुषं | (ராவணன் செவிக்கு) ஒவ்வாத | सलक्ष्मणः | லக்ஷ்மணருடன் |
| | | यत्र | எங்கிருந்தாரோ அங்கு |
| वाक्यं | சொல்லை | | |
| रावणं | ராவணனைப் பார்த்து | आजगाम | வந்துசேர்ந்தார். |

**तं मेरुशिखराकारं दीप्तामिव शतह्रदाम् । गगनस्थं महीस्थास्ते ददृशुर्वानराधिपाः ॥ २ ॥**

| | | | |
|---|---|---|---|
| ते | அந்த | दीप्तां | பளிச்சென மின்னும் |
| महीस्थाः | பூமியில் நிற்கின்ற | शतह्रदां इव | மின்னல்போலவே |
| वानराधिपाः | வானரத்தலைவர்கள் | गगनस्थं | ஆகாசத்திலிருக்கும் |
| मेरुशिखराकारं | மேருமலைச்சிகரம் போல் உருக்கொண்டவராய் | तं | அவரை |
| | | ददृशुः | கண்டார்கள். |

**स हि मेघाचलप्रख्यो महेन्द्रसमविक्रमः । सर्वायुधधरो वीरो दिव्याभरणभूषितः ॥ ३ ॥**

| | | | |
|---|---|---|---|
| सः हि | அவரோ | सर्वायुधधरः | எல்லா ஆயுதங்களையும் தரித்து |
| मेघाचलप्रख्यः | மேகத்தையும் மலையையும் நிகர்த்தவர். | दिव्याभरण-भूषितः | திவ்யமான ஆபரணங்களையணிந்துகொண்டிருந்த |
| महेन्द्रसमविक्रमः | இந்திரனை நிகர்த்த ஆண்மையுடையவர். | वीरः | சூரர். |

**ये चाप्यनुचरास्तस्य चत्वारो भीमविक्रमाः । तेऽपि सर्वायुधोपेता भूषणैश्चापि भूषिताः ॥**

| | | | |
|---|---|---|---|
| तस्य | அவரது | सर्वायुधोपेताः च | எல்லா ஆயுதங்களையும் தரித்து |
| अनुचराः | கூட்டாளிகள் | भूषणैः अपि | ஆபரணங்களாலும் |
| चत्वारः | நால்வர்கள் | भूषिताः अपि | அலங்கரிக்கப்பட்டவர்களுமான |
| ये च | எவர்களோ | भीमविक्रमाः | மெச்சத்தக்க ஆண்மையுடையவர்கள். |
| ते अपि | அவர்களும் | | |

**तमात्मपञ्चमं दृष्ट्वा सुग्रीवो वानराधिपः । वानरैः सह दुर्धर्षश्चिन्तयामास बुद्धिमान् ॥ ५ ॥**

| | | | |
|---|---|---|---|
| वानराधिपः | வானரமன்னனும் | सह | கூட |
| दुर्धर्षः | எவராலும் வெல்லமுடியாதவனும் | आत्मपञ्चमं | ஐவர்களில் ஒருவரா[கிய |
| बुद्धिमान् | புத்திமானும் ஆகிய | तं | அவரை |
| सुग्रीवः | சுக்ரீவன் | दृष्ट्वा | பார்த்து |
| वानरैः | வானரர்களோடு | चिन्तयामास | தனக்குள்ளேயே ஆலோசனை செய்தான். |

**चिन्तयित्वा मुहूर्तं तु वानरांस्तानुवाच ह । हनुमत्प्रमुखान्सर्वानिदं वचनमुत्तमम् ॥ ६ ॥**

| | | | |
|---|---|---|---|
| मुहूर्तं तु | ஒரு முகூர்த்தகாலம் | सर्वान् | எல்லோரையும் |
| चिन्तयित्वा | ஆலோசனைசெய்து | इदं | பின்வரும் (நோக்கி) |
| हनुमत्प्रमुखान् | ஹனுமானைத் தலைமையாய்க்கொண்ட | वचनं | சொல்லை |
| तान् | அந்த | उत्तमं ह | எதிலும் மேம்பட்டதாய் |
| वानरान् | வானரர்கள் | उवाच | சொன்னான்: |

**एष सर्वायुधोपेतश्चतुर्भिः सह राक्षसैः । राक्षसोऽभ्येति पश्यध्वमस्मान्हन्तुं न संशयः ॥**

| | | | |
|---|---|---|---|
| एषः | " இந்த | अस्मान् | நம்மை |
| राक्षसः | அரக்கன் | हन्तुं | கொல்ல |
| सर्वायुधोपेतः | வேண்டிய ஆயுதம் | अभ्येति | வந்திருக்கிறான். |
| चतुर्भिः | நான்கு [தரித்தவனாய் | संशयः न | இதில் ஐயமில்லை. |
| राक्षसैः | அரக்கர்களோடு | पश्यध्वम् | நீங்களும் கவனியுங்கள்." |
| सह | கூட | | |

**सुग्रीवस्य वचः श्रुत्वा सर्वे ते वानरोत्तमाः । सालानुद्यम्य शैलांश्च इदं वचनमब्रुवन् ॥**

| | | | |
|---|---|---|---|
| ते | அந்த | सालान् | ஆச்சாமரங்களையும் |
| वानरोत्तमाः | வானரோத்தமர்கள் | शैलान् च | மலைகளையும் |
| सर्वे | எல்லோரும் | उद्यम्य | கையிலெடுத்துக்கொ |
| सुग्रीवस्य | சுக்ரீவனது | इदं | பின்வரும் [ண்டு |
| वचः | சொல்லை | वचनं | சொல்லை |
| श्रुत्वा | கேட்டு | अब्रुवन् | சொன்னார்கள்: |

**शीघ्रं व्यादिश नो राजन्वधायैषां दुरात्मनाम् । निपतन्तु हताश्चैते धरण्यामल्पतेजसः ॥**

| | | | |
|---|---|---|---|
| राजन् | " வேந்தே! | व्यादिश | ஆக்கினை தந்தருளும். |
| दुरात्मनां | கெட்ட எண்ணமுடைய | अल्पतेजसः | அற்பமான ஆற்றலுடைய |
| एषां | இவர்களை | एते च | இவர்களும் |
| वधाय | கொல்வதற்கு | हताः | கொல்லப்பட்டவர் |
| नः | எங்களுக்கு | धरण्यां | பூமியில் [களாய் |
| शीघ्रं | இப்போதே | निपतन्तु | வந்துவிழட்டும்." |

**तेषां संभाषमाणानामन्योन्यं स विभीषणः । उत्तरं तीरमासाद्य खस्थ एव व्यतिष्ठत ॥**

| | | | |
|---|---|---|---|
| सः | அந்த | उत्तरं | வட |
| विभीषणः | விபீஷணர் | तीरं | கரையை |
| तेषां | அவர்கள் | आसाद्य | அடைந்து |
| अन्योन्यं | ஒருவர்க்கொருவர் | खस्थः एव | ஆகாசத்திலிருந்தவராகவே |
| संभाषमाणानां | பேசிக்கொண்டிருக்கையில் | व्यतिष्ठत | காத்துநின்றார். |

**उवाच च महाप्राज्ञः स्वरेण महता महान् । सुग्रीवं तांश्च संप्रेक्ष्य खस्थ एव विभीषणः ॥**

| | | | |
|---|---|---|---|
| महाप्राज्ञः | பேரறிவினரும் | महता स्वरेण | பெருங்குரலால் |
| महान् | மஹானுமான | खस्थः एव | ஆகாசத்திலிருந்தவண்ணமே |
| विभीषणः | விபீஷணர் | | |
| सुग्रीवं च | சுக்ரீவனையும் | उवाच | பின்வருமாறு சொன்னார்: |
| तान् च संप्रेक्ष्य | அவர்களையும்பார்த்து | | |

रावणो नाम दुर्वृत्तो राक्षसो राक्षसेश्वरः । तस्याहमनुजो भ्राता विभीषण इति श्रुतः ॥

| | | | |
|---|---|---|---|
| दुर्वृत्तः | "கொடிய நடத்தை உள்ள | अनुजः | அப்பாற்பிறந்த |
| राक्षसेश्वरः | ராக்ஷஸமன்னனுய் | भ्राता | தம்பி |
| रावणः नाम | ராவணனென்ற | अहं | நான். |
| राक्षसः | அரக்கனிருக்கிறுன். | विभीषणः | விபீஷணன் |
| तस्य | அவனுக்கு | इति | என்று |
| | | श्रुतः | பெயர்பூண்டவன். |

तेन सीता जनस्थानाद्धृता हत्वा जटायुषम् । रुद्धा च विवशा दीना राक्षसीभिः सुरक्षिता ॥

| | | | |
|---|---|---|---|
| तेन च | "அவனுலேயே, | विवशा | எதுவும் செய்யமுடியாதவளாய் |
| जटायुषं | ஜடாயுவெனும் [கழுகை | दीना | உள்ளம் நொந்து |
| हत्वा | கொன்று | रुद्धा | சிறைப்படுத்தப்பட்ட[வளாய் |
| जनस्थानात् | ஜனஸ்தானத்திலிருந்து | राक्षसीभिः | அரக்கிகளால் |
| हृता | அபகரிக்கப்பட்ட | सुरक्षिता | ஜாக்கிரதையாய் காவல் காக்கப்படுகிறுர். |
| सीता | சீதாதேவியார் | | |

तमहं हेतुभिर्वाक्यैर्विविधैश्च न्यदर्शयम् । साधु निर्यात्यतां सीता रामायेति पुनः पुनः ॥

| | | | |
|---|---|---|---|
| अहं | "நான் | विविधैः | பல |
| सीता | 'ஸீதாதேவியார் | हेतुभिः | காரணங்களோடு கூடிய |
| रामाय | ஸ்ரீராமருக்கு | | |
| निर्यात्यतां | திருப்பிக்கொடுத்து விடப்படட்டும்' | वाक्यैः च | சொற்களால் |
| | | साधु | என்னுலியன்றமட்டும் |
| इति | என்று | तं | அவனுக்கு |
| पुनः पुनः | மீண்டும் மீண்டும் | न्यदर्शयम् | அறிவூட்டினேன். |

स च न प्रतिजग्राह रावणः कालचोदितः । उच्यमानं हितं वाक्यं विपरीत इवौषधम् ॥

| | | | |
|---|---|---|---|
| कालचोदितः | "யமனுக்காட்பட்ட | विपरीतः | சாகத்துணிந்தவன் |
| सः | அந்த | औषधं | மருந்தை |
| रावणः च | ராவணனே | इव | எவ்வண்ணமோ அவ்வண்ணமே |
| उच्यमानं | சொல்லிய | | |
| हितं | நன்மை பயக்கவல்ல | प्रतिजग्राह न | ஏற்றுக்கொள்ளவில்லை. |
| वाक्यं | சொல்லை | | |

सोऽहं परुषितस्तेन दासवच्चावमानितः । त्यक्त्वा पुत्रांश्च दारांश्च राघवं शरणं गतः ॥१६॥

| | | | |
|---|---|---|---|
| तेन | "அவனுல் | पुत्रान् च | புதல்வர்களையும் |
| परुषितः | கடிந்துபேசப்பட்ட | दारान् च | மனைவிமார்களையும் |
| दासवत् | அடிமைபோல் [வனும் | त्यक्त्वा | துறந்துவிட்டு |
| अवमानितः च | அவமானஞ்செய்யப்பட்டவனுமான | राघवं | ஸ்ரீராமரை |
| | | शरणं | சரணமாக |
| सः | அந்த | गतः | வந்தடைந்துவிட்டேன். |
| अहं | நான் | | |

**सर्वलोकशरण्याय राघवाय महात्मने । निवेदयत मां क्षिप्रं विभीषणमुपस्थितम् ॥ १७ ॥**

| | | | |
|---|---|---|---|
| सर्वलोकशरण्याय | "எல்லா உலகுக்கும் சரண்யராய் | मां | அடியேனை |
| महात्मने | மகாத்மாவாகிய | विभीषणं | விபீஷணனென |
| राघवाय | ஸ்ரீராமருக்கு | क्षिप्रं | காலதாமதமின்றி |
| उपस्थितं | இங்குவந்து சேர்ந்திருக்கும் | निवेदयत | தெரிவிப்பீர்களாக." |

**एतत्तु वचनं श्रुत्वा सुग्रीवो लघुविक्रमः । लक्ष्मणस्याग्रतो रामं संरब्धमिदमब्रवीत् ॥१८॥**

| | | | |
|---|---|---|---|
| सुग्रीवः | சுக்ரீவன் | लक्ष्मणस्य | லக்ஷ்மணரது |
| एतत् | இந்த | अग्रतः | முன்னிலையில் |
| वचनं | வார்த்தையை | संरब्धं तु | நெஞ்சம் பதைபதைக்கவே |
| श्रुत्वा | கேட்டு | | |
| लघुविक्रमः | பறந்துசெல்லுகின்றவனுகி | इदं | பின்வருமாறு |
| रामं | ஸ்ரீராமரிடத்தில் | अब्रवीत् | விண்ணப்பஞ்செய்தார்: |

**रावणस्यानुजो भ्राता विभीषण इति श्रुतः । चतुर्भिः सह रक्षोभिर्भवन्तं शरणं गतः ॥**

| | | | |
|---|---|---|---|
| रावणस्य | "ராவணனுக்கு | चतुर्भिः | நான்கு |
| अनुजः | பின்பிறந்த | रक्षोभिः सह | அரக்கர்களோடுகூட |
| भ्राता | தம்பியாகிய | भवन्तं | தேவரீரை |
| विभीषणः | விபீஷணன் | शरणं | சரணமாக |
| इति | என்ற | गतः | வந்துசேர்ந்திருக்கிறான். |
| श्रुतः | பெயர்பூண்டவன் | | |

**मन्त्रे व्यूहे नये चारे युक्तो भवितुमर्हसि । वानराणां च भद्रं ते परेषां च परन्तप ॥२०॥**

| | | | |
|---|---|---|---|
| परन्तप | "சத்துருக்களை தபிக்க அடிப்பவரே, | नये | தர்மநோக்கிலும் |
| | | चारे | தர்மஅனுஷ்டானத்திலும் |
| वानराणां च | வானரர்களுடையவும் | | |
| परेषां च | சத்துருக்களுடையவும் | युक्तः | ஆராய்ந்து அறிந்த |
| | | भवितुं अर्हसि | ஆககடவீர். [வராக |
| मन्त्रे | உத்தேசத்திலும் | ते भद्रम् | இப்படிச்செய்யதிருவுளமிசைந்தருள்வீராக |
| व्यूहे | சைனிய அமைப்பிலும் | | |

**अन्तर्धानगता ह्येते राक्षसाः कामरूपिणः । शूराश्च निकृतिज्ञाश्च तेषु जातु न विश्वसेत् ॥**

| | | | |
|---|---|---|---|
| एते | "இந்த | शूराः च | சூரர்கள். |
| राक्षसाः हि | அரக்கர்களோ | निकृतिज्ञाः च | வஞ்சனைகளில் நிபுணர்கள். |
| अन्तर्धानगताः | கண்ணுக்கு தெரியாதபடி சஞ்சரிக்கவல்லவர்கள். | तेषु | அவர்களிடத்தில் |
| | | जातु | ஒருபொழுதும் |
| कामरूपिणः | நினைத்த ரூபமெடுக்க வல்லவர்கள். | विश्वसेत् न | நம்பிக்கை வைக்கக்கூடாது. |

**प्रणिधी राक्षसेन्द्रस्य रावणस्य भवेदयम् । अनुप्रविश्य सोऽस्मासु भेदं कुर्यान्न संशयः ॥**

| | | | |
|---|---|---|---|
| अयं | " இவன் | सः | அவன் |
| राक्षसेन्द्रस्य | ராக்ஷஸமன்னனாகிய | अस्मासु | நம்மிடத்தில் |
| रावणस्य | ராவணனது | अनुप्रविश्य | புகுந்து |
| | | भेदं | தீங்கை |
| प्रणिधिः | வேவுகாரனாக | कुर्यात् | விளைவிக்கலாம். |
| भवेत् | இருக்கலாம். | संशयः न | இதில் ஐயமில்லை. |

**अथवा स्वयमेवैष छिद्रमासाद्य बुद्धिमान् । अनुप्रविश्य विश्वस्ते कदाचित्प्रहरेदपि ॥२३॥**

| | | | |
|---|---|---|---|
| अथवा | " இதில்லையெனில | छिद्रं | அஜாக்கிரதையாயிருக்கும் சமயத்தை |
| बुद्धिमान् | தந்திரசாலியாகிய | | |
| एषः | இவன் | आसाद्य | கண்டு, |
| अनुप्रविश्य | புகுந்து, | कदाचित् | ஒருக்கால், |
| विश्वस्ते | (நம்பி) தைரியமாயிருக்கும் தேவரீர் விஷயத்தில் | स्वयं एव | சிரமம் சிறிதுமின்றி, |
| | | प्रहरेत् अपि | தீங்கு விளைவிக்கலாமே. |

**मित्रादपि बलं चैव मौलं भृत्यबलं तथा । सर्वमेतद्बलं ग्राह्यं वर्जयित्वा द्विषद्बलम् ॥ २४ ॥**

| | | | |
|---|---|---|---|
| द्विषद्बलं | " சத்துருப்படையை | मित्रात् अपि | சிநேகிதனிடத்திலிருந்துதான் |
| वर्जयित्वा | தவிர்த்து | | |
| बलं च एव | படையும் | एतत् सर्वं | எதுவும் |
| मौलं | மன்னர்களைசேவித்து அநுபவமுடையதும் | बलं | படையாக |
| | | ग्राह्यम् | ஏற்றுக்கொள்ளத் தக்கது. |
| भृत्यबलं तथा | அடிமையாகியபலமும் | | |

**प्रकृत्या राक्षसो ह्येष भ्राताऽमित्रस्य ते प्रभो । आगतश्च रिपोः पक्षात्कथमस्मिन्हि विश्वसेत् ॥**

| | | | |
|---|---|---|---|
| प्रभो | " பிரபுவே! | रिपोः | சத்துருவின் |
| एषः हि | இவனோ | पक्षात् च | கக்ஷியிலிருந்துதான் |
| प्रकृत्या | இயல்பாகவே | आगतः | வந்துசேர்ந்திருக்கிறான். |
| राक्षसः | அரக்கன். | हि | ஆகையால் |
| ते | தேவரீரது | अस्मिन् | இவ்விஷயத்தில் |
| अमित्रस्य | சத்துருவினது | कथं | எப்படித்தான் |
| भ्राता | தம்பி. | विश्वसेत् | நம்பக்கூடும்? |

**रावणेन प्रणिहितं तमवेहि विभीषणम् । तस्याहं निग्रहं मन्ये क्षमं क्षमवतां वर ॥ २६ ॥**

| | | | |
|---|---|---|---|
| क्षमवतां वर | " பொறுமையுடையவரில் சிறந்தவரே! | अवेहि | கருதுவீராக. |
| | | तस्य | அவனுக்கு |
| तं | அந்த | निग्रहं | தண்டனை விதிப்பதையே |
| विभीषणं | விபீஷணனை | क्षमं | ஏற்றதாக |
| रावणेन | ராவணனால் | अहं | நான் |
| प्रणिहितं | அனுப்பப்பட்டவனாக | मन्ये | நினைக்கிறேன். |

**राक्षसो जिह्मया बुद्ध्या संदिष्टोऽयमुपागतः। प्रहर्तुं मायया छन्नो विश्वस्ते त्वयि चानघ ॥**

| | |
|---|---|
| अनघ | "வஞ்சகமில்லாத நெஞ்சகத்தவரே! |
| अयं | இந்த |
| राक्षसः | அரக்கன் |
| जिह्मया बुद्ध्या | கபட எண்ணத்தோடு |
| संदिष्टः | அனுப்பப்பட்டு |
| मायया | மாயையால் |
| छन्नः | மறைந்து |
| विश्वस्ते | நம்பிக்கையால் தைரியமாயிருக்கும் |
| त्वयि | தேவரீரிடத்தில் |
| प्रहर्तुं च | தீங்குவிளைவிக்கத்தான் |
| उपागतः | வந்துசேர்ந்திருக்கிறான். |

**प्रविष्टः शत्रुसैन्यं हि प्राप्तः शत्रुरतर्कितः । निहन्यादन्तरं लब्ध्वा उलूक इव वायसान् ॥**

| | |
|---|---|
| प्राप्तः हि | "வந்திருக்கப்பட்டவனே |
| शत्रुः | வைரி. |
| अतर्कितः | நம்மால் எதிர்பார்க்கப்பட்டவனில்லை. |
| शत्रुसैन्यं | சத்ருசைனியத்தில் |
| प्रविष्टः | புகுந்தவனாய் |
| अन्तरं | ஏற்றசமயத்தை |
| लब्ध्वा | அடைந்து, |
| उलूकः | ஒரு கோட்டான் |
| वायसान् | காக்கைகளை |
| इव | எவ்வண்ணமோ அவ்வண்ணமே |
| निहन्यात् | கொல்வான். |

**वध्यतामेष दण्डेन तीव्रेण सचिवैः सह । रावणस्य नृशंसस्य भ्राता ह्येष विभीषणः ॥**

| | |
|---|---|
| एषः | "இந்த |
| विभीषणः | விபீஷணன் |
| नृशंसस्य | கொடியவனாகிய |
| रावणस्य | ராவணனது |
| भ्राता | தம்பி. |
| हि | ஆகையால் |
| एषः | இவன் |
| सचिवैः सह | மந்திரிமார்களோடு |
| तीव्रेण | கொடிய [கூட |
| दण्डेन | தண்டனையால் |
| वध्यताम् | கொல்லப்படவேண்டும்." |

**एवमुक्त्वा तु तं रामं संरब्धो वाहिनीपतिः। वाक्यज्ञो वाक्यकुशलं ततो मौनमुपागमत् ॥**

| | |
|---|---|
| वाक्यज्ञः | உரையாளனும் |
| वाहिनीपतिः | சேனைத்தலைவனுமான அவன் |
| संरब्धः | பரபரப்புற்றவனாய் |
| एवं | மேற்கண்டவாறு |
| तु | இவ்விஷயத்தில் |
| वाक्यकुशलं | மொழிகளின் நுட்பங்களை அறிபவராகிய |
| तं रामं | அந்த ஸ்ரீராமரிடம் |
| उक्त्वा | விண்ணப்பஞ்செய்து |
| ततः | அதன்மேல் [விட்டு |
| मौनं उपागमत् | மௌனமாயிருந்தான். |

**सुग्रीवस्य तु तद्वाक्यं श्रुत्वा रामो महायशाः । समीपस्थानुवाचेदं हनुमत्प्रमुखान्हरीन् ॥**

| | |
|---|---|
| सुग्रीवस्य | சுக்ரீவனது |
| तद्वाक्यं | அம்மொழிக்கு |
| श्रुत्वा | திருச்செவிசாய்த்தருளிய |
| महायशाः | பெரும்புகழ்படைத்த |
| रामः | ஸ்ரீராமர் |
| समीपस्थान् | பக்கலிலிருந்த |
| हनुमत्प्रमुखान् | ஹனுமார் முதலிய |
| हरीन् | வானரர்களைப் பார்த்து |
| तु | இவ்விஷயத்தில் |
| इदं | பின்வருமாறு |
| उवाच | திருவாய்மலர்ந்தருளினார்: |

**यदुक्तं कपिराजेन रावणावरजं प्रति । वाक्यं हेतुमदर्थ्यं च भवद्भिरपि तच्छ्रुतम् ॥ ३२ ॥**

| | | | |
|---|---|---|---|
| रावणावरजं प्रति | "ராவணன் கடைசித் தம்பியைப்பற்றி | अर्थ्यं | நமக்குத் தெரிந்திருக்கவேண்டியதாயும் |
| कपिराजेन | வானரமன்னனால் | उक्तं च | சொல்லப்பட்டதோ |
| यत् वाक्यं | எந்த ஒரு மொழி | तत् | அது |
| हेतुमत् | நல்ல காரணங்களோடிருப்பதாயும் | भवद्भिः अपि | உங்களாலும் |
| | | श्रुतम् | செவிகொள்ளப்பட்டது. |

**सुहृदा ह्यर्थकृच्छ्रेषु युक्तं बुद्धिमता सता । समर्थेनापि संदेष्टुं शाश्वतीं भूतिमिच्छता ॥३३॥**

| | | | |
|---|---|---|---|
| अर्थकृच्छ्रेषु हि | ஒரு காரியத்தை நிர்ணயிக்க முடியாத சமயங்களிலோவென்றால் | सुहृदा | நன்னோக்குடையவனும் |
| | | बुद्धिमता | புத்திமானும் |
| | | सता | நல்லவனும் |
| | | समर्थेन अपि | சாமர்த்யசாலியுமாகிய இவனால் |
| शाश्वतीं | சாச்வதமான | | |
| भूतिं | பாக்கியத்தை | संदेष्टुं | ஆலோசனை சொல்வதற்கு |
| इच्छता | கருதும் | युक्तम् | உரிமையுண்டு." |

**इत्येवं परिपृष्टास्ते स्वं स्वं मतमतन्द्रिताः । सोपचारं तदा राममूचुर्हितचिकीर्षवः ॥ ३४ ॥**

| | | | |
|---|---|---|---|
| तदा | அப்பொழுது | स्वं स्वं | அவரவர்கள் |
| इति एवं | மேற்கண்டவாறு | मतं | அபிப்பிராயத்தை |
| परिपृष्टाः | வினவப்பட்ட | रामं | ஸ்ரீராமருக்கு |
| ते | அவர்கள் | सोपचारं | மிக்க வணக்கத்தோடு |
| हितचिकीर्षवः | நன்மையை நாடி | ऊचुः | பின்வருமாறு தெரிவித்தார்கள்: |
| अतन्द्रिताः | ஊக்கங்கொண்டவர்களாய் | | |

**अज्ञातं नास्ति ते किंचित्त्रिषु लोकेषु राघव । आत्मानं सूचयञ्जानन्पृच्छस्यस्मान्सुहृत्तया ॥**

| | | | |
|---|---|---|---|
| राघव | "ஸ்ரீராம! | सुहृत्तया | கருணையால் |
| त्रिषु लोकेषु | மூன்றுலகங்களிலும் | आत्मानं | தங்களுக்கே உரிய பிறவிக்குணத்தை |
| ते | தேவரீருக்கு | | |
| अज्ञातं | தெரியாதது | सूचयन् | வெளிப்படையாய்க் காட்டுபவராய் |
| किञ्चित् अस्ति न | ஒன்றும் இல்லை. | | |
| जानन् | ஸர்வக்ஞராகிய தேவரீர் | अस्मान् | எங்களை |
| | | पृच्छसि | வினவி அருளுகிறீர். |

**त्वं हि सत्यव्रतः शूरो धार्मिको दृढविक्रमः । परीक्ष्यकारी स्मृतिमान्निसृष्टात्मा सुहृत्सु च ॥**

| | | | |
|---|---|---|---|
| त्वं हि | "தேவரீரோ | धार्मिकः | தர்மமொன்றையே சர்வமுமாய்க்கொண்டவர். |
| सत्यव्रतः | சத்தியத்தை நோன்பாகக்கொண்டவர். | | |
| शूरः | (தனி) வீரர். | | |

| | | | |
|---|---|---|---|
| दृढविक्रमः | யாவராலும் அசைக்க வொண்ணுத ஆண் மையுடையவர். | स्मृतिमान् | ஞாபகசக்தியமைந் தவர். |
| परीक्ष्यकारी | ஆராய்ந்தறிந்தே எதையும் செய்பவர். | सुहृत्सु | அடிமைப்பட்டவர் களிடத்தில் |
| | | निसृष्टात्मा च | ஆத்மசமர்ப்பணம் பண்ணினவருமாகி ன்றீர். |

तस्मादेकैकशस्तावद्ब्रुवन्तु सचिवास्तव । हेतुतो मतिसंपन्नाः समर्थाश्च पुनः पुनः ॥ ३७ ॥

| | | | |
|---|---|---|---|
| तव | "தேவரீருக்கு | पुनः | இன்னும் |
| तावत् | இப்பொழுது | तस्मात् | ஆகையால் |
| पुनः | எங்களைவிட | | |
| समर्थाः | சமர்த்தர்களும் | हेतुतः | காரணத்துடன் |
| मतिसंपन्नाः च | புத்தியிற் சிறந்தவர் களுமான | एकैकशः | ஒவ்வொருவராய் |
| सचिवाः | ஆலோசனை சொல்லத் தக்கவர்களிருக்கின் றனர். | ब्रुवन्तु | அவர்கள் சொல் லட்டும்". |

इत्युक्ते राघवायाथ मतिमानङ्गदोऽग्रतः । विभीषणपरीक्षार्थमुवाच वचनं हरिः ॥ ३८ ॥

| | | | |
|---|---|---|---|
| राघवाय | ஸ்ரீராகவருக்கு | अग्रतः | முதலில் |
| इति उक्ते | இவ்வாறு தெரிவிக்கப் பட்டதும் | विभीषण-परीक्षार्थं | விபீஷணரை விசாரித் தறியும்பொருட்டு |
| मतिमान् | வெகு புத்திமானுகிய | अथ | பின்வரும் |
| अङ्गदः | அங்கதனெனும் | वचनं | சொல்லை |
| हरिः | வானரன் | उवाच | சொன்னுன் : |

शत्रोः सकाशात्संप्राप्तः सर्वथा शङ्क्य एव हि । विश्वासयोग्यः सहसा न कर्तव्यो विभीषणः ॥

| | | | |
|---|---|---|---|
| विभीषणः हि | "விபீஷணனே | शङ्क्यः एव | சந்தேகிக்கப்படவேண் டியவனே. |
| शत्रोः | சத்ருவினது | सहसा | உடனே |
| सकाशात् | சமீபியிலிருந்து | विश्वासयोग्यः | நம்பிக்கைக்குரியவ னுக |
| संप्राप्तः | வந்தவனுயிருக்கிருன். | | |
| हि | ஆனபடியால் | कर्तव्यः न | கொள்ளத்தக்கவனு கான். |
| सर्वथा | எல்லாபடியாலும் | | |

छादयित्वाऽऽत्मभावं हि चरन्ति शठबुद्धयः । प्रहरन्ति च रन्ध्रेषु सोऽनर्थस्तत्कृतो भवेत् ॥

| | | | |
|---|---|---|---|
| शठबुद्धयः | "வஞ்சகநெஞ்சத் தினர்கள் | प्रहरन्ति | தீங்கு விளைவிக்கிருர் கள். |
| | | हि | ஆகையால் |
| आत्मभावं | உட்கருத்தை | सः | அந்த |
| छादयित्वा | ஒளித்துக்கொண்டு | अनर्थः | தீங்கு |
| चरन्ति | நடக்கிருர்கள். | तत्कृतः | அவர்களால் விளைந் ததாய் |
| रन्ध्रेषु च | வாய்த்த சமயங்களி லோ | भवेत् | ஏற்படும். |

**अर्थानर्थौ विनिश्चित्य व्यवसायं भजेत ह। गुणतः संग्रहं कुर्याद्दोषतश्च विसर्जयेत् ॥४१॥**

| | | | |
|---|---|---|---|
| अर्थानर्थौ | "நன்மைதீமைகளை | गुणतः | நன்மையுண்டெனில் |
| विनिश्चित्य | ஆராய்ந்தறிந்து | संग्रहं | நம்முடன் சேர்த்துக் கொள்வதை |
| व्यवसायं | ஒரு தீர்மானத்தை | कुर्यात् | செய்யலாம். |
| भजेत ह | ஒருவன் அடைய வேண்டும். | दोषतः च | தீமையாகில் |
| | | विसर्जयेत | விட்டுவிடவேண்டும். |

**यदि दोषो महांस्तस्मिंस्त्यज्यतामविशङ्कितम्। गुणान्वापि बहून् ज्ञात्वा संग्रहः क्रियतां नृप।**

| | | | |
|---|---|---|---|
| नृप | "மன்னவரே! | वा | அல்லது |
| तस्मिन् | அவனிடத்தில் | बहून् | பல |
| महान् | பெரும | गुणान् | குணங்களை |
| दोषः | தோஷம் | ज्ञात्वा अपि | கண்டுவிட்டால் |
| यदि | உண்டெனில் | संग्रहः | நம்முடன் சேர்த்துக் கொள்வது |
| अविशङ्कितं | நம்பாது | | |
| त्यज्यतां | விட்டுவிடப்படட்டும். | क्रियताम् | செய்யப்படட்டும்." |

**शरभस्त्वथ निश्चित्य साध्यं वचनमब्रवीत्। क्षिप्रमस्मिन्नरव्याघ्र चारः प्रतिविधीयताम् ॥**

| | | | |
|---|---|---|---|
| शरभः | சரபன் | नरव्याघ्र | "புருஷோத்தமரே! |
| साध्यं | செய்யவேண்டியதை | अस्मिन् | இவன் விஷயத்தில் |
| निश्चित्य तु | ஆலோசனைசெய்து | क्षिप्रं | இப்போதே |
| अथ | பின்வரும் | | |
| वचनं | சொல்லை | चारः | ஓர் ஒற்றன் |
| अब्रवीत् | மொழிந்தான்: | प्रतिविधीयताम् | அனுப்பப்படட்டும். |

**प्रणिधाय हि चारेण यथावत्सूक्ष्मबुद्धिना। परीक्ष्य च ततः कार्यो यथान्याय्यं परिग्रहः॥**

| | | | |
|---|---|---|---|
| सूक्ष्मबुद्धिना | "நுண்ணறிவையுடைய | ततः | அதன்மேல் |
| चारेण हि | ஓர் ஒற்றனாலேயே | परिग्रहः | (நமது ஆதரவில்) ஏற்றுக்கொள்ள லென்பது |
| यथावत् | முறைப்படி | | |
| परीक्ष्य | விசாரித்தறிந்து | | |
| प्रणिधाय | ஒருவித தீர்மானத்திற்கு வந்து | यथान्याय्यं च | சாத்யமாகில் |
| | | कार्यः | செய்யத்தக்கது." |

**जाम्बवांस्त्वथ संप्रेक्ष्य शास्त्रबुद्ध्या विचक्षणः। वाक्यं विज्ञापयामास गुणवद्दोषवर्जितम् ॥**

| | | | |
|---|---|---|---|
| विचक्षणः | சாமர்த்தியசாலியாகிய | दोषवर्जितं | தோஷமில்லாததும் |
| जाम्बवान् | ஜாம்பவந்தர் | गुणवत् तु | நல்லதுமாகிய |
| शास्त्रबुद्ध्या | சாஸ்திரஞானத்தால் | वाक्यं | மொழியை |
| संप्रेक्ष्य | ஆராய்ச்சிசெய்து | विज्ञापयामास | விக்ஞாபனஞ் செய்தார்: |
| अथ | பின்வரும் | | |

**बद्धवैराच्च पापाच्च राक्षसेन्द्राद्विभीषणः । अदेशकाले संप्राप्तः सर्वथा शङ्क्यतामयम् ॥४६॥**

| | | | |
|---|---|---|---|
| विभीषणः | " விபீஷணர் | संप्राप्तः | வந்துசேர்ந்திருக் |
| बद्धवैरात् च | தீப்பகைகொண்ட | सर्वथा | எப்படியும் [கிறான். |
| पापात् च | பாபியுமான [வனும் | अयं | இவன்மேல் |
| राक्षसेन्द्रात् | ராக்ஷஸமன்னனிட மிருந்து | शङ्क्यताम् | சந்தேகம் கொள்ளப் படவேண்டும்". |
| अदेशकाले | காலமில்லாக்காலத்தில் | | |

**ततो मैन्दस्तु संप्रेक्ष्य नयापनयकोविदः । वाक्यं वचनसंपन्नो बभाषे हेतुमत्तरम् ॥ ४७ ॥**

| | | | |
|---|---|---|---|
| ततः | அனந்தரம் | संप्रेक्ष्य | தீர்க்காலோசனை செய்து |
| नयापनय- कोविदः | நீதி அநீதிகளில் நிபு ணனும் | हेतुमत्तरं | சிறந்த காரணங்களோ டிசைந்த |
| वचनसंपन्नः तु | எடுத்துரைப்பதில் தேர்ச்சிபெற்றவனு மான | वाक्यं | ஒரு சொல்லை |
| मैन्दः | மைந்தன் | बभाषे | பின்வருமாறு மொழிந்தான்: |

**वचनं नाम तस्यैष रावणस्य विभीषणः । पृच्छ्यतां मधुरेणायं शनैर्नरवरेश्वर ॥ ४८ ॥**

| | | | |
|---|---|---|---|
| नरवरेश्वर | " புருஷோத்தம | वचनं | சொன்னதைப்பற்றி |
| एषः | இந்த [மன்னரே ! | अयं नाम | இவனே |
| विभीषणः | விபீஷணன் | मधुरेण | இனிமையாகவும் |
| तस्य | அந்த | शनैः | மெதுவாகவும் |
| रावणस्य | ராவணனுக்கு | पृच्छ्यताम् | வினவப்படட்டும். |

**भावमस्य तु विज्ञाय ततस्तत्त्वं करिष्यसि । यदि दुष्टो न दुष्टो वा बुद्धिपूर्वं नरर्षभ॥४९॥**

| | | | |
|---|---|---|---|
| नरर्षभ | " புருஷோத்தம! | न दुष्टः वा | நல்லவனாகவாவது |
| ततः | அதனால் | यदि | இருக்கிறபடி |
| अस्य | இவனது | बुद्धिपूर्वं | மனச்சாக்ஷிக்கேற்ற |
| भावं | உட்கருத்தை | तु | அப்பொழுது [படி |
| विज्ञाय | அறிந்துகொண்டு | तत्त्वं | நியாயமானதை |
| दुष्टः | துஷ்டனாகவாவது | करिष्यसि | தேவரீர் செய்வீராக" |

**अथ संस्कारसंपन्नो हनुमान्सचिवोत्तमः । उवाच वचनं श्लक्ष्णमर्थवन्मधुरं लघु ॥ ५० ॥**

| | | | |
|---|---|---|---|
| अथ | அதன்மேல் | अर्थवत् | சிறந்த பொருளுடை |
| संस्कारसंपन्नः | சாஸ்திர சிகாமணியும் | मधुरं | இனியதும், [யதும், |
| सचिवोत्तमः | மந்திரிகளில் உத்தமரு மாகிய | लघु | தோஷரஹிதமுமான |
| | | वचनं | சொல்லை |
| हनुमान् | ஹனுமார் | उवाच | பின்வருமாறு மொழிந்தார்: |
| श्लक्ष्णं | அழகியதும் | | |

**न भवन्तं मतिश्रेष्ठं समर्थं वदतां वरम्। अतिशाययितुं शक्तो बृहस्पतिरपि ब्रुवन् ॥५१॥**

| | | | |
|---|---|---|---|
| मतिश्रेष्ठं | "புத்தியில் எவருக்கும் மேம்பட்டவரும் | समर्थं | எதிலும் சமர்த்தரு[மாகிய |
| वदतां | பேசுபவர்களில் | भवन्तं | தேவரீருக்கு |
| वरं | (எவருக்கும்) மேம்பட்டவரும் | बृहस्पतिः | பிருகஸ்பதி |
| | | ब्रुवन् अपि | பேசினபோதிலும் |
| | | अतिशाययितुं | மேம்பட்டவராயிருக்க |
| | | न शक्तः | முடியாது. |

**न वादान्नापि सङ्घर्षान्नाधिक्यान्न च कामतः। वक्ष्यामि वचनं राजन्यथार्थं राम गौरवात्॥**

| | | | |
|---|---|---|---|
| राजन् | "ஸ்வாமியே! | न | இல்லை; |
| राम | ஸ்ரீராம! | सङ्घर्षात् | எவருக்கும் மேம்பட்டவனாகயிருக்கவேண்டுமெனும் எண்ணத்தாலும் |
| वचनं | ஒரு சொல்லை | न | இல்லை; |
| यथार्थं | எனக்குத் தோன்றுகிறபடியே | आधिक्यात् | மேன்மையாலும் |
| गौरवात् अपि | (தேவரீரிடத்திலுள்ள) பூஜார்ஹத்தன்மையால் | न | இல்லை; |
| वक्ष्यामि | சொல்வேன்; | कामतः च | பக்ஷபாதத்தாலும் |
| वादात् | (பிறர் சொல்லியவைகளை அல்லவென்று) எதிர் நியாயம் எடுத்துரைப்பதால் | न | இல்லை. |

**अर्थानर्थनिमित्तं हि यदुक्तं सचिवैस्तव। तत्र दोषं प्रपश्यामि क्रिया न ह्युपपद्यते ॥ ५३ ॥**

| | | | |
|---|---|---|---|
| तव | "தேவரீரது | तत्र हि | அதிலோ |
| सचिवैः | அன்பர்களால் | दोषं | நன்மை பயக்காததாக |
| अर्थानर्थनिमित्तं | குணதோஷங்களையறியும் விஷயத்தில் | प्रपश्यामि | நான் நினைக்கின்றேன். |
| उक्तं | சொல்லப்பட்டது | क्रिया हि | உபாயமும் |
| यत् | எதுவோ, | उपपद्यते न | சாத்தியமானதாயில்லை. |

**ऋते नियोगात्सामर्थ्यमवबोद्धुं न शक्यते ॥ ५४ ॥**

| | | | |
|---|---|---|---|
| नियोगात् ऋते | "(ஒரு கார்யத்தில்) ஏவலாகச்செய்யப்பார்த்தாலன்றி | सामर्थ्यं | ஏற்றதை |
| | | अवबोद्धुं | கண்டறிய |
| | | न शक्यते | முடியாது. |

**सहसा विनियोगो हि दोषवान्प्रतिभाति मा ॥ ५५ ॥**

| | | | |
|---|---|---|---|
| सहसा | "விசாரியாது | दोषवान् | பிசகென |
| विनियोगः हि | ஒரு கார்யத்தில் ஏவுவதென்பதும் | मा | எனக்கு |
| | | प्रतिभाति | தோன்றுகின்றது.

चारप्रणिहितं युक्तं यदुक्तं सचिवैस्तव । अर्थस्यासंभवात्तत्र कारणं नोपपद्यते ॥ ५६ ॥

| | | | |
|---|---|---|---|
| तत्र | "தேவரீரது | अर्थस्य | (அனுப்பவேண்டிய) அவச்யத்திற்கு |
| सचिवैः | அன்பர்களால் | असंभवात् | இடமில்லாமலிருக்கிறபடியால் |
| चारप्रणिहितं | 'சாரனையனுப்புவது | तत्र | இச்சமயத்தில் |
| युक्तं | யுக்த'மென | उपपद्यते न | ஏற்றதன்று. |
| यदुक्तं | எது சொல்லப்பட்ட | | |
| कारणं | அந்த உபாயம் [தோ | | |

अदेशकाले संप्राप्त इत्ययं यद्विभीषणः । विवक्षा तत्र मेऽस्तीयं तां निबोध यथामति ॥
स एष देशः कालश्च भवतीति यथा तथा ॥ ५७ ॥

| | | | |
|---|---|---|---|
| अयं | "'இந்த | अस्ति | இருக்கிறது. |
| विभीषणः | விபீஷணர் | तां | அதற்கு |
| अदेशकाले | (சாஸ்திரபிரமாணங்களுக்கு விலகியும்) காலமில்லாதகாலத்திலும் | निबोध | செவிசாய்த்தருள்வீராக. |
| सम्प्राप्तः | வந்திருக்கின்றார்' | यथा तथा | முன்பின் ஆராய்ச்சி செய்யுங்கால் |
| इति यत् | என்ற | सः | அந்த |
| तत्र | அவ்விஷயத்தில் | कालः | ஏற்றகாலமென்பது |
| यथामति | சிற்றறிவிற்கெட்டியவாறு | एषः | இதுதானென |
| मे विवक्षा | அடியேன் தெரிவிக்க வேண்டியதாய் | भवति | விளங்குகிறது. |
| इति | பின்கண்டவாறு | देशः च | அப்படியே சாஸ்திரப் பிரமாணங்களுக்கு விருத்தமில்லாததாகவுமிருக்கிறது. |
| इयं | இதொன்று | | |

पुरुषात्पुरुषं प्राप्य तथा दोषगुणावपि । दौरात्म्यं रावणे दृष्ट्वा विक्रमं च तथा त्वयि ॥
युक्तमागमनं तस्य सदृशं तस्य बुद्धितः ॥ ५८ ॥

| | | | |
|---|---|---|---|
| रावणे | "ராவணனிடத்தில் | दृष्ट्वा | ஆராய்ச்சிசெய்து |
| दौरात्म्यं च | துஷ்டஸ்வபாவத் [தையும் | प्राप्य | ஒருவித தீர்மானத்திற்கு வந்து |
| तथा | அப்படியே | पुरुषात् पुरुषं | அற்பனிடமிருந்து மகானிடம் |
| त्वयि | தேவரீரிடத்தில | आगमनं | போய்ச்சேர்தலென்பது |
| विक्रमं | (ஆதரித்தருளும்) சக்தியையும் | तस्य | அவருக்கு |
| तथा | அவ்வண்ணமே | युक्तं | ஏற்றது. |
| दोषगुणौ अपि | (தான் செய்யும் காரியத்திலுள்ள) தோஷங்கள், குணங்கள் ஆகிய இவ்விரண்டையும் | तस्य | அவரது |
| | | बुद्धितः | புத்திக்கும் |
| | | सदृशम् | ஏற்றது. |

